மலர் 15 இதழ் 97

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd. M No. 7897

Phone No. 76190: 76199



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 18—12—74 புதன்

வெளியூர் 19—12—74 வியாழன்

இந்திரா திட்டம்:
காமராஜர்
புறக்கணிப்பு

4-ம் பக்கம்

# நகரசபைத் தேர்தல்: மீண்டும் தள்ளிவைப்பு

## சட்டசபையில் மசோதா தாக்கல்

**சென்னை, டிச. 18—தமிழ்நாட்டில் உள்ள நகரசபைகளின் பதவிக் காலத்தை வருகிற 1975-ம் ஆண்டு ஜூலை 1-ம் தேதி வரை நீடிக்க வைக்கும் மசோதா இன்று சட்டசபையில் தாக்கல் செய்யப்பட்டது.**

அமைச்சர் அன்பில் தர்மலிங்கம் இந்த மசோதாவை தாக்கல் செய்தார். எனவே வருகிற பிப்ரவரி மாதம் நடைபெறும் என்று ஏற்கெனவே அறிவிக்கப்பட்டிருந்த நகரசபைத் தேர்தல் மீண்டும் தள்ளி வைக்கப்படுகிறது.

தமிழ் நாட்டில் உள்ள நகரசபைகளின் உறுப்பினர்களுடைய பதவிக் காலத்தை அடுத்த ஜூலை மாதம் 1-ந்தேதி வரை நீடிக்க மாநில அரசுக்கு அதிகாரம் அளிக்கும் மசோதா இன்று தமிழ்நாடு சட்டசபையில் தாக்கல் செய்யப்பட்டது.

சென்னை மாநகரில் உள்ள வட்டங்களின் எண்ணிக்கையை 120லிருந்து 150 ஆக உயர்த்தும் விஷயம் அரசாங்கத்தின் பரிசீலனையில் இருந்து வருகிறது. அதை முன்னிட்டு சென்னை மாநகராட்சிக்கான தேர்தலை அடுத்த நவம்பர் மாதம் வரை தள்ளி வைக்க இந்த மசோதா அதிகாரம் அளிக்கிறது.

மதுரை மாநகரில் உள்ள வட்டங்களின் எண்ணிக்கையை 65ஆக உயர்த்தும் விஷயம் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. சென்ற நவம்பர் 1-ந் தேதியிலிருந்து மதுரை மாநகராட்சி கலைக்கப்பட்டது. அதன் நிர்வாகத்தை நடத்த நியமிக்கப்படும் தனி அதிகாரி அவர் பதவி ஏற்கிற தேதியிலிருந்து 6 மாத காலத்திற்குள் மதுரை மாநகராட்சிக்கு தேர்தல் நடத்த ஏற்பாடு செய்வார்.

மற்ற நகர சபைகள் பொருத்த வரை அடிக்கட்டுகளுடன் கூடிய வாக்குச் சீட்டுகளைத் தயாரிப்பதற்காக நகர சபைகளின் பதவிக்காலம் சென்ற நவம்பர் 1-ந் தேதியிலிருந்து 4 மாதத்திற்கு நீடிக்கப்பட்டது.

வறட்சி நிலைமையை முன்னிட்டு, நகர சபைகளின் பதவிக்காலத்தை ஜூலை மாதம் 1-ந் தேதி வரை நீடிக்க சர்க்காருக்கு இந்த மசோதா அதிகாரம் அளிக்கிறது.

## தேர்தலில் கலந்துகொள்ள தடை ரத்து



மத்திய மாநில அரசுகளின் நிறுவனங்களில் வேலை செய்கிற ஊழியர்கள் தேர்தலில் கலந்து கொள்ளக் கூடாது என்று தற்போது உள்ள கட்டுப்பாடு இந்த மசோதா மூலம் ரத்துசெய்யப்படுகிறது. ஆகவே தேர்தலில் அவர்கள் கலந்து கொள்ளலாம்.

## முன்னாள் மேயர் மீண்டும் மேயராக தடை

சென்னை, மதுரை ஆகிய மாநகரங்களில் முன்னாள் மேயர்கள், முன்னாள் துணை மேயர்கள் ஆகியோர் மீண்டும் அந்தப் பதவிக்கு வர இந்த மசோதா தடைசெய்கிறது.

சென்னை மாநகரில் உள்ளது போலவே மதுரை மாநகரிலும் வரி அப்பீல் கமிட்டி நிறுவப்படும். அதற்கு சப் ஜட்ஜ் தலைவராக இருப்பார். அதில் மாநகராட்சி உறுப்பினர்கள் 2 பேர்களும் அங்கியிருப்பார்கள். மதுரை மாநகராட்சி தேர்தல் நடக்கும் வரை சப் ஜட்ஜே தனியாக செயல்படுவார்.

## "பஸ் சர்வீஸ்: வரி கட்ட அவசியமில்லை"

சென்னை, டிச. 18—பஸ் போக்குவரத்தை நிறுத்தியவர், பஸ் வரி கட்டவேண்டியதில்லை என்று ஒரு வழக்கில் சென்னை ஹைகோர்ட் தீர்ப்பு அளித்துள்ளது.

பஸ் போக்குவரத்தை நிறுத்திய பிறகும், பஸ் வரிசெலுத்தும்படி கோரி, அந்த பஸ் அதிபரான கே. சி. ராமச்சந்திரனுக்கு அதிகாரிகள் நோட்டீஸ் அனுப்பியிருந்தனர், அவர் அதை ஆட்சேபித்து சென்னை ஹைகோர்ட்டில் "ரிட்" மனு போட்டார்.

இந்த வரி விதிப்பு சரியல்ல என்று கூறி சென்னை ஹைகோர்ட் நீதிபதி ராமானுஜம் தீர்ப்பு அளித்தார். ராமச்சந்திரனின் மனு ஏற்றுக் கொள்ளப்பட்டது.

## அரிசி விலை நிர்ணயம்

# கருணாநிதி அறிவிப்பு

**சென்னை, டிச. 18—அரிசியின் உச்சபட்ச விற்பனை விலையை சட்டசபையில் இன்று கருணாநிதி அறிவித்தார்.**

நம்பிக்கையில்லாத் தீர்மான விவாத முடிவில் அவர் இந்த அறிவிப்பை வெளியிட்டுக் கூறியதாவது:-

கூட்டுறவு துறையில் கொள்முதல் செய்யப்படும் அரிசி ஒரு கிலோ (மோட்டா ரகம்) ரூ. 1-90.

நடுத்தரம் கிலோ ரூ. 2-00
சன்னரகம் கிலோ ரூ. 2-10
மிகச் சன்னரகம் ரூ. 2-20

தனியார் கடைகளிலும் இந்த விலைக்கு மேல் விற்றால் அது சட்டப்படி குற்றம். அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படும்.

லெவிமூலம் கொள்முதல் செய்யப்படும் அரிசிக்கு விலை வருமாறு:—

மோட்டா ரகம் கிலோ ரூ. 1—60. நடுத்தரம் ரூ. 1—70. சன்ன ரகம் ரூ. 1—80. மிகச் சன்ன ரகம் ரூ. 1—90.

### கடன் வசூல் ஒத்திவைப்பு

வறட்சிப் பகுதிகளில் கடன் வசூல் ஒத்திவைக்கப்படும். அப்பகுதிகளில் நிலவரி ரத்து செய்யப்படும். மேலும் கூட்டுறவு கடன் வசூலும் ஒத்தி வைக்கப்படும்.

இவ்வாறு கருணாநிதி அறிவித்தார்.

முன்னதாக நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின்மீது நடந்த விவாதத்துக்குப் பதிலளித்து முதல்வர் கருணாநிதி பேசினார்.

முதல்வர் கருணாநிதி பேசியதாவது:– எப்போதும் இல்லாத பரபரப்பு இப்போது கொண்டுவரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின்போது இருந்தது.

அதற்குக் காரணம் மதிப்பீட்டுக் குழு அறிக்கையில் குறிப்பிடப்பட்ட ஒரு பைல் தங்களுக்குக் காட்டப்படவேண்டும் என்பதால் ஏற்பட்டது.

### பைல் விவகாரம்

டெல்லியில் இதே போல் ஓர் அறிக்கை காட்டப்படவேண்டும் என்று எதிர்க்கட்சிகள் கூறி, இங்கு கோவை செழியன் கூறியது போல் அங்கே மொரார்ஜி தேசாய் சத்தியாக்கிரகம் செய்வேன் என்று சொல்லும் அளவுக்கு போய் விட்டது. பிறகு பிரதமரும், சபாநாயகரும் பைலைப் பார்க்கலாம்; ஆனால் வெளியே சொல்லக் கூடாது என்று உறுதி மொழி பெற்று பைல் காட்டப்பட்டது. இங்கு அப்படி எல்லாம் இல்லாமல் எதிர்க்கட்சியினருக்கு பைல் காட்டப்பட்டது. ஆனால் இங்கு அ தி மு கவும், கம்யூனிஸ்டு கட்சியினரும் இந்த பைலை பார்க்கவேண்டும் என்று காட்டிய ஆர்வத்தை நாடாளுமன்றத்தில் காட்டவில்லை.

கே.டி.கே. தங்கமணி வலது கம்யூனிஸ்டு) (குறுக்கிட்டு); குறிப்பு எடுக்கக்கூடாது என்று கூறியதை எதிர்த்து ராஜ்ய சபையில் எங்கள் உறுப்பினர் பூபேஷ் குப்தா வெளிநடப்பு செய்துள்ளார்.

### எதிர்க்கட்சி தயக்கம்

முதல்வர்: நான் நாடாளுமன்றம் என்று குறிப்பிட்டது மக்கள் சபையைத்தான். மொரார்ஜி தேசாய் "சத்தியாக்கிரகம்செய்வேன்" என்று அறிவித்தபோது அது முறையல்ல என்று தி.மு.க. கூறியது. அ.தி.மு.க.வும் அப்படியே கூறியது. ஆனால் அப்படிப்பட்ட சங்கடங்களுக்கு எல்லாம் இடம் வைக்காமல் இங்கு பைலை பார்க்கலாம் என்று ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த அரசு மீது நம்பிக்கையில்லை என்று சொல்வதற்கு எதிர்க்கட்சிகள் 2 நாட்கள் தயக்கம் காட்டினார்கள்.

எதிர்க் கட்சியினர் பேசும்போது இந்த ஆட்சி திருந்திக் கொள்ளவேண்டும் என்று கூறினார்கள். அதில் இருந்து இந்த ஆட்சி நீடிக்க வேண்டும் என்பதுதான் அவர்களது விருப்பம் என்பது அவர்கள் இந்த ஆட்சி திருந்திக் கொள்ளவேண்டும் என்று கூறியதிலிருந்து வெளிப்பட்டது.

எதிர்க்கட்சி கூறும் கருத்துக்களையும் ஏற்று செயல்படுத்தி வருகிறோம்.

### அலிபாபா கெட்டவரா?

நண்பர் ஆலடி அருணா பேசும்போது இவர்கள் அண்ணாவின் தம்பிகளா? அலிபாபாவின் கூட்டமா என்று கேட்டார் அருணா எப்போதுமே விறுவிறுப்பாகப் பேசக்கூடியவர். எனக்குப் பின்னாலே உட்கார்ந்து அவர் முன்னர் ஒரு சமயம் மாநில சுயாட்சி தீர்மானத்தை முன் மொழிந்து பேசிய பேச்சு எனது காதில் இன்னமும் ஒலித்துக்கொண்டிருக்கிறது. அப்படிப்பட்ட அருணா புரியாமல்

7-ம் பத்தி பார்க்க

## பால் விலை உயர்வு ஆட்சேப வழக்கு

சென்னை, டிச. 18 – பால் விலை உயர்வு ஆட்சேப வழக்கில் பால் வள நிறுவனம் இந்த மாதம் 20-ந் தேதிக்குள் அதன் பதிலை தாக்கல் செய்ய வேண்டும் என்று சென்னை 6-வது சிவில் கோர்ட் நீதிபதி இன்று உத்தரவிட்டார்.

## அதிகாரிகள் சொத்துக்களை

# பறிமுதல் செய்ய வேண்டும் என்கிறார் பொன்னப்ப நாடார்

**சென்னை, டிச. 18—ரூ. 1½ கோடி அரிசி பேர ஊழலில் சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் சொத்துக்களைப் பறிமுதல் செய்யவேண்டும் என்று இன்று சட்டசபையில் பொன்னப்ப நாடார் கூறினார்.**

தி. மு. க. அரசு மீது கொண்டுவரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மீது இன்று 4-வது நாளாக நடந்த விவாதத்தின்போது அவர் பேசியதாவது:—

இந்த மன்றத்தில் உங்களுக்கு இருக்கும் மிகை பெரும்பான்மையை வைத்து இந்த நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை தோற்கடிக்கலாம். ஆனால் மக்கள் உங்களை சந்தேகக் கண்கொண்டுபார்க்கிறார்கள். மதிப்பீட்டுக்குழு அறிக்கையின் அடிப்படையில் இந்த அரசு ராஜிநாமா செய்ய வேண்டும். மதிப்பீட்டுக்குழு கூறியுள்ள குற்றச்சாட்டுகளில் சம்பந்தப்பட்டவர்கள் அப்போது உணவு அமைச்சராக இருந்தவருக்கு சொந்தக்காரர்களாக இருந்திருக்கிறார்கள்.

மந்திரி ப. உ. சண்முகம் (குறுக்கிட்டு): மீண்டும் மறுக்கிறேன். அதில் உள்ளவர்கள் யாரும் எனக்கு சொந்தக்காரர்கள் அல்ல.

பொன்னப்ப நாடார்: இந்த சம்பவம் நடந்ததற்கு நீங்களும் உடந்தையாக இருந்திருக்கிறீர்கள் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன். தவறுக்கு நீங்களும் பொறுப்பு. பேச்சுவார்த்தை டெண்டர் மூலம் டெண்டர் விட்டது சட்டத்திற்கு புறம்பானது.

டெண்டர்களில் டிபாசிட் கட்டாத ஒருவருக்கு அவ்வளவு நெல்லையும் கொடுத்திருக்கிறீர்கள். அவரைப் பற்றி விசாரிக்காமல் உத்தரவிட்டது தவறு. அந்த உத்தரவில் அமைச்சர் ப.உ. சண்முகம், அமைச்சர் ஆதித்தனார், முதலமைச்சர் ஆகியோர் கையெழுத்திட்டிருக்கிறார்கள் வேண்டுமென்றே செய்யப்பட்டிருக்கிறது. என்பது எனது குற்றச்சாட்டு. அமைச்சரவைக்கு இதில் கூட்டுப் பொறுப்பு இருக்கிறது.

நாங்கள் பார்த்த பைலில் ஏழெட்டு பக்கங்கள் ஒட்டப்பட்டிருந்தன. அதற்குள்ளே என்ன இருந்தது என்பது தெரியவில்லை. இதையும் ஒரு குற்றச்சாட்டாக வைக்கிறேன்.

### ஆள் மாறாட்டமா?

இந்த விஷயத்தில் அமைச்சரவை சரியாக கவனிக்கவில்லை. இது நியாயம் தானா? தருமம் தானா? யார் அந்த தாண்டவராயன்? ஆறுமுகம் என்பவர் தன் பெயரைத் தாண்டவராயன் என்று கொடுத்திருக்கிறார். ஆள்மாறாட்டம் நடந்ததுகூட தெரிந்து கொள்ளவில்லை. இதுதான் ஜனநாயகமோ? இவருடைய டெண்டரை எப்படி ஒப்புக்கொண்டீர்கள்? இதற்கு அரசு தான் முழுப் பொறுப்பு ஏற்கவேண்டும். நிச்சயமாக இதில் ஊழல் மலிந்திருக்கிறது. இதற்கு பொறுப்பாக உள்ள மந்திரி சபை ராஜிநாமா செய்யவேண்டும்.

நீங்கள் நாட்டுக்கு செய்யும் சேவை என்னவென்றால் இந்த சட்ட மன்றத்தைக் கலைத்துவிட்டு மறு தேர்தலுக்கு தயாராகுங்கள். மறு தேர்தலுக்கு நாங்களும் தயாராக இருக்கிறோம்.

மதிப்பீட்டுக் குழு அறிக்கையிலேயே இது சம்பந்தப்பட்ட பணம் பலரிடமிருந்து அரசாங்கத்திற்கு பாக்கி வரவேண்டியுள்ளது என்று கூறப்பட்டுள்ளது.

அமைச்சர் ப.உ. சண்முகம் (குறுக்கிட்டு): இதற்குத் தேவையான நடவடிக்கைகளை எடுத்திருக்கிறோம்.

2-ம் பக்கம் பார்க்க

## கருணாநிதி அறிவிப்பு

4-ம் பத்தி தொடர்ச்சி

பேசுகிறார் என்று நினைக்கிறேன். அலிபாபா பாத்திரத்தை அவருடைய தலைவர் ஏற்று நடித்திருக்கிறார். அவர் எப்போதுமே நல்ல பாத்திரத்தை மட்டுமே ஏற்று நடிப்பவர். ஆகையால் அலிபாபா கெட்டவர் அல்ல.

நான் எங்கே தவறாக நினைத்துக் கொள்வேனோ என்று கருதி 1001 இரவு கதைகளை நேற்றெல்லாம் படித்தேன்.

ஆலடி அருணா (குறுக்கிட்டு): நான் அலிபாபாவை கூறவில்லை அதில் வரும் கூட்டத்தைத் தான் குறிப்பிட்டேன். இந்தி ஒழிக என்று கூறும்போது இந்தியின் ஆதிக்கம் ஒழிக என்றுதான் பொருளே தவிர இந்தி ஒழிக என்பதல்ல பொருள். அந்த முறையில் தான் அலிபாபாவின் கூட்டம் என்று குறிப்பிட்டேன்.

முதல்வர்: நானும் அதைத் தான் குறிப்பிட்டேன். அக்கிரமத்தை எதிர்த்து நியாயத்துக்காகப் போராடியவர் அலிபாபா.

கோவை செழியன்:— அப்படியானால் முதல் அமைச்சரின் கூட இருப்பவர்கள் எல்லாம் அக்கிரமக்காரர்கள் என்று முதல்வர் கருதுகிறாரா?

முதல்வர்:- திருடர் கூட்டம் தான் அலிபாபாவுக்கு எதிரிகள்.

# அண்ணா மீது அ.தி.மு.க. அபாண்டம்

சென்னை, டிச. 18—திராவிடக் கழகத்தின் பிள்ளையார் சிலை உடைப்புப் போராட்டத்தில் அண்ணா கலந்துகொண்டு பிள்ளையார் சிலையை உடைத்ததாக சட்டசபையில் அ. தி. மு. க. உறுப்பினர் கோவைசெழியன் கூறியதை முதல்வர் கருணாநிதி மறுத்தார்.

"அண்ணா என்றுமே பிள்ளையார் சிலையை உடைத்தது கிடையாது. செழியன் வேறு கட்சிக்கு சென்றிருந்ததால் இந்த விஷயத்தை மறந்திருக்கலாம். அண்ணா என்றுமே பிள்ளையார் சிலையை உடைத்தது கிடையாது என்று முதல்வர் கருணாநிதி கூறினார்.

"அண்ணாவின் வழி வந்த எங்களுக்கு ஆண்டவன் மீது நம்பிக்கை இல்லை" என்று எட்மண்ட் (அதிமுக.) கூறியதைத் தொடர்ந்து இந்த விவகாரம் கிளம்பியது.

எட்மண்ட் கூறியதாவது:- மழை பொய்த்ததற்கும், வறட்சி ஏற்பட்டதற்கும் ஆண்டவன்தான் காரணம் என்றும் ஆகவே அவர் மீதுதான் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவர வேண்டுமென இங்கு நேற்று ஏ. ஆர். பெருமாள் குறிப்பிட்டார்.

அண்ணாவின் வழிவந்த எங்களுக்கு ஆண்டவன மீது நம்பிக்கையில்லை. ஆகவே ஆண்டவன் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வராமல் ஆண்டுகொண்டிருப்பவர்கள் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்திருக்கிறோம்.

முதல்வர் கருணாநிதி:— ஆண்டவன் மீது நம்பிக்கையில்லை என்று எட்மண்ட் குறிப்பிட்டார். அண்ணா அந்தக் கொள்கையைக் கொண்டவர் அல்ல. ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்று கூறி வந்தார். அவருடைய கொள்கையைத்தான் தி.மு.க.வினரான நாங்கள் கடைப்பிடிக்கிறோம்.

ஆனால இப்போது அ. தி. மு. க.வினருக்கு ஆண்டவன் மீது நம்பிக்கையில்லை என்பது விளங்கிவிட்டது.

ஆலடி அருணா (அ. தி. மு. க.) நம்பிக்கை உள்ளவர்கள் யாரையும்புண்படுத்தகூடாது என்பதற்காகத்தான் அண்ணா "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்று கூறினார். அண்ணா என்றுமே ஆண்டவன்மீது நம்பிக்கை வைத்ததில்லை.

கோவை செழியன் (அ. தி. மு.க) அண்ணா தி.க.வில் இருந்த போது பிள்ளையார் சிலையையே உடைத்திருக்கிறார்.

முதல்வர்: செழியன் வேறு கட்சிக்கு சென்றிருந்ததால் அந்த விஷயத்தை மறந்திருக்கலாம். அண்ணா என்றுமே பிள்ளையார் சிலையை உடைத்தது கிடையாது. தி.க.வினர் பிள்ளையார்சிலைகளை உடைத்த போதுகூட "நான் பிள்ளையாரை உடைக்கவும்மாட்டேன். பிள்ளையாருக்கு தேங்காயும் உடைக்கமாட்டேன்" என்று தான் அண்ணா கூறினார். "வேலைக்காரி" படத்தில்கூட இறுதியில் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்று கூறி முடித்திருக்கிறார்.

## பொன்னப்ப நாடார் பேச்சு

1-ம் பக்கத் தொடர்ச்சி

இதில் சில வழக்குகள், ஹைகோர்ட்டில் உள்ளன.

பொன்னப்ப நாடார்: இந்தக் குற்றச் சாட்டுக்கு பொறுப்பான அமைச்சர் ராஜிநாமா செய்வதுதான் பொருத்தம்.

மத்திய அமைச்சரவையில் டி. டி. கே. அமைச்சராக இருந்தபோது ஒரு கோடி ரூபாய் சம்பந்தப்பட்ட முந்திரா ஊழல் குற்றச்சாட்டு வந்தது. உடனே டி. டி. கே. மந்திரி பதவியை ராஜிநாமா செய்தார்.

### ப. உ. ச. பதில்

அமைச்சர் ப. உ. சண்முகம் (குறுக்கிட்டு):— குற்றம் நடந்தபோதுநான்உணவு அமைச்சராக இருந்திருக்கிறேன். இந்தக் குற்றங்களைக் கண்டுபிடித்து நடவடிக்கையும் எடுத்திருக்கிறேன். நடவடிக்கை எடுக்கும்படி போலீசையும் தூண்டியிருக்கிறேன். அப்படி நடவடிக்கை எடுத்த நான் ராஜிநாமாசெய்ய வேண்டுமா?

பொன்னப்பநாடார்:- சரியான நடவடிக்கை எடுக்கவில்லை. இதற்கு முழுப் பொறுப்பும் நீங்கள் தான்.

அமைச்சர் ப.உ. சண்முகம்: எனக்கும் மனச்சாட்சியுண்டு. எந்த இடத்திலாவது நீதி வழக்கு நடக்கக்கூடாதென்று தடுத்தேனா? இடைஞ்சலாக இருந்தேனா? அதற்கு ஆதாரம் இருக்கிறதா?

### அதிகாரிகள் சொத்து பறிமுதல்

பொன்னப்ப நாடார்: அமைச்சரின் மனச்சாட்சியை அளக்கவங்களிடம் சோதனைக் கருவி இல்லை. மக்கள் என்ன கருதுகிறார்கள் என்பதைச் சொல்ல வேண்டியது எங்கள் கடமை. இந்த விஷயத்தில் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் மீதும் கிரிமினல் வழக்கு தொடர வேண்டும். அவர்களுடைய சொத்துக்களை பறிமுதல் செய்ய வேண்டும். அப்போதுதான் இவ்வித பெரிய தகராறுகள் நடக்காமல் இருக்கும்.

இந்த அறிக்கையின் அடிப்படையில் இந்த அமைச்சரவை நீடிக்க வழியில்லை. நிச்சயமாகராஜிநாமாசெய்ய வேண்டும்.

இவ்வாறு பொன்னப்ப நாடார் கூறினர்.

"தவறான தகவலைத் தந்துவிட்டார்"

# சட்டசபையில் ஹாண்டே மீது ஆதித்தனர் புகார்

**சென்னை, டிச. 18—சில 'பைல்'கள் காணமல் போய்விட்டதாகவும் அவற்றுக்குப் பதிலாக புதிய 'பைல்'களைத் தயாரிக்க, அரசாங்கம் உத்தரவு பிறப்பித்திருப்பதாகவும் சட்டசபையில் அ. தி. மு. க. உறுப்பினர் ஹாண்டே கூறினர்.**

இது தவறான தகவல் இதற்கு ஹாண்டே மீது என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதை சபாநாயகர் கூறவேண்டும் என்று அமைச்சர் ஆதித்தனர் கேட்டுக்கொண்டார்.

இதுபற்றி இன்று சட்டசபையில் நடந்த விவாதம் வருமாறு:—

நேற்று சட்டசபை முடிவடையும்நேரத்தில்ஹாண்டே (அ.தி.மு.க.) ஒழுங்குப் பிரச்னை கிளப்பினர்.

உணவு உற்பத்தி சம்பந்தமான 18 அரசாங்க பைல்கள் காணமல் போய்விட்டிருப்பதாகவும், அவற்றைப் புதிதாகத் தயாரிக்க வேண்டுமென அரசாங்க உத்தரவு பிறப்பிக்கப் பட்டுள்ளதாகவும் ஹாண்டே கூறினர்.

உடனே சபாநாயகர் இம் மாதிரி விஷயங்களை சபையில் எழுப்புவதற்கு முன்னர் தம்மிடம் அனுமதி பெற்றிருக்க வேண்டும் என்று சுட்டிக் காட்டினர்

ஆனல் ஹாண்டே அந்த அரசாங்க உத்தரவின்(ஜி.ஓ.) பிரதியை தன்னிடம் வைத்திருப்பதாகக் கூறி காணமல் போனதாகக் கூறப்படும் பைல்களின் எண்களைப் படித்தார்.

### தி. மு. க. கோரிக்கை

அப்போது சபை கலையும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்ததால் கந்தப்பன் (திமுக) எழுந்து ஒழுங்குப் பிரச்னை கிளப்பினர்.

கடைசி நேரத்தில் இப்பிரச்னை எழுப்பப்பட்டிருப்பதால் இது குறித்த உண்மையை அரசாங்க தரப்பில் இருந்து கூற வாய்ப்பில்லாமல் போய்விடுகிறது என்றும் ஆகவே இந்த விவகாரம் எதையும் சபை நடவடிக்கைக் குறிப்பில் இடம் பெறாமலும், பத்திரிகையில் வெளிவராமலும் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று சபாநாயகரைக் கேட்டுக் கொண்டார்.

சபாநாயகரும் அதை ஏற்றுக்கொண்டு நாளை (புதன் கிழமை) இதுகுறித்து தீர்ப்பு அளிக்கும் வரை இந்த விஷயம் நடவடிக்கைக் குறிப்பில் இடம் பெறக்கூடாது என்று நேற்று உத்தரவிட்டார். அப்போதே அ.திமுக. உறுப்பினர்கள் இதை எதிர்த்தனர்.

ஆயினும் நேரமாகிவிட்டதால் சபாநாயகர் சபையை ஒத்திவைத்தார்.

இன்று காலை சபையில் கேள்வி நேரம் முடிந்ததும் இப்பிரச்னையை சபாநாயகர் எழுப்பினர்.

சபாநாயகர் கூறியதாவது: ஹாண்டே தன்னிடம் வைத்திருந்த ஆதாரத்தை நேற்று என்னிடம் காட்டினர்.

அவர் குறிப்பிட்டதெல்லாம் உண்மைதான். ஆனல் அவர் கூறியது போல அது அரசாங்க உத்தரவல்ல. அது இலாகாவினல் பிறப்பிக்கப் சுற்றறிக்கையே யாகும்.

இவ்வாறு சபாநாயகர் கூறினர்.

உடனே மீண்டும் ஹாண்டே எழுந்து நேற்று கூறிய குற்றச் சாட்டுகளைத் திரும்பக்கூறினர்.

இதற்கு அமைச்சர் மாதவன் விளக்கமளித்தார்.

### மாதவன் விளக்கம்

அமைச்சர் மாதவன் கூறியதாவது:—

நேற்று ஹாண்டே பேசிய போது அரசாங்கமே ஏதோ காணமல் போன பைல்களை மீண்டும் தயாரிக்க உத்தர விட்டது போலச் சொன்னர். ஆனல் இப்படி சில பைல்கள் காணமல் போவதும் அவை மீண்டும் தயாரிக்கப்படுவதும் வழக்கமான முறையே.

ஹாண்டே பேசும்போது நேற்று இவை அனைத்தும் இந்தக் கோட்டையின் எல்லைக்குள் நடைபெற்றதாகச் சொன்னர்.

ஆனல் இந்த உத்தரவு ரெவினியூ போர்டு அதிகாரி போட்ட உத்தரவே. ஆகையால் ஹாண்டே இச்சபையை எப்படி திசை திருப்பி விட்டிருக்கிறர் என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

அமைச்சர் ஆதித்தனர் பதவி விலகவேண்டும் என்று ஹாண்டே கேட்டிருக்கிறர்.

ஆகையால் அந்த உத்தரவு போட்டதற்கும் அரசுக்கும் சம்பந்தம் இல்லை. ரெவினியூ இலாகா செயலாளர் சில பைல்களைக் காணேம் என்று தெரிந்ததும் சம்பந்தப்பட்ட உதவியாளர்களிடம் கேட்டிருக்கிறர். அவற்றில் சில கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. கிடைக்காதவற்றை தயாரிக்குமாறு சொல்லியிருக்கிறர். இவையெல்லாம் சாதாரணப் பைல்களே ஆங்காங்கு குமாஸ்தாக்கள் வேலை செய்து கொண்டிருக்கும் இடங்களில் காணமல் போவதும் அவற்றை மீண்டும் தயாரிப்பதும் வழக்கமான முறையே. இதில் எந்தவிதமான தவறும் இல்லை.

பிறகு ஹாண்டே கூறியதாவது:—

ரெவினியூ போர்டு என்பது கோட்டையின் ஓர் அங்கம். ஆகையால் இதில் தங்களுக்குப் பொறுப்பு இல்லை என்று சொல்லக் கூடாது.

பொன்னப்ப நாடார்: (பழைய காங்) தங்களுக்குப் பொறுப்பு இல்லை என்று அரசாங்கம் கூறக்கூடாது.

அமைச்சர் மாதவன்: தவறு இல்லை என்று நான் சொல்ல வில்லை. பொறுப்பு இல்லை என்றும் நான் சொல்லவில்லை ஆனல் சபைக்கு தவறான தகவலை அளிக்கக்கூடாது என்று தான் கூறினேன்.

### அனந்தநாயகி

அனந்தநாயகி (இ. காங்): கோட்டையில் நடந்தால் மட்டும்தான் அரசாங்கத்துக்குப் பொறுப்பா. அமைச்சர்கள் தங்களுக்கு இஷ்டம இருந்தால் பைலை தருவது. இல்லையென்றல் மறுப்பது என்பதுதான் முறையா? ஆகையால் இதில் விவசாய அமைச்சருக்குப் பொறுப்புள்ளது. முன்னர் பக்தவத்சலம் பைல்களை எரித்ததாகக் கூட நீங்கள் குற்றம் சாட்டியிருக்கிறீர்கள்.

அமைச்சர் மாதவன்:—அப்போது பக்தவத்சலம் அதை ஒத்துக்கொண்டார். அது வேறு ஒரு சரித்திரம். ஆனல் காணமல் போன பைல்களைத் தயாரிப்பது வழக்கமான முறை.

பெ. சீனிவாசன் (அதிமுக) ஒன்றிரண்டு பைல்கள் காணமல்போவதுசகஜம். ஆனல்18 பைல்கள் காணமல் போயுள்ளன. ரெவினியூ போர்டு என்பது ஹைகோர்ட்டைப் போல சுதந்திரத் தன்மை கொண்ட ஸ்தாபனமல்ல. ஆகையால் அரசுக்குப் பொறுப்புண்டு.

சீனிவாசன் முன்னர் தாண்டவராயன் பைல் குறித்து சொன்னதை மீண்டும் எடுத்துக் கூற முற்பட்டபோது "அது குறித்தெல்லாம் இப்போது பேசவேண்டாம் என்றர்.

ஆயினும் சீனிவாசன் "இல்லை இல்லை விடமாட்டேன்" என்றர்.

அமைச்சர் மாதவன்:— ஹாண்டே குறிப்பிட்டபோது இந்த பைல்கள் ஒரே தடவையில் காணமல் போனதாகக் குறிப்பிட்டார். அது தவறு. அவை பல ஆண்டுக்காலத்தில் காணமல் போனவை.

அமைச்சர் ஆதித்தனர்:— இங்கு படிக்கப்பட்டது ஜி. ஓ. அல்ல.

சபாநாயகர்: அதை நான் ஏற்கெனவே கூறிவிட்டேன்.

### ஹாண்டே மீது நடவடிக்கை

அமைச்சர் ஆதித்தனர்:— இப்படி ஜி.ஓ.என்று சபைக்கு தவறான தகவலைஅளித்தஉறுப்பினர் மீது என்ன நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பது பற்றி சபாநாயகர் கூற வேண்டும்.

பின்னர் கோவை செழியன் ஒழுங்குப்பிரச்னை கிளப்பினர்

"இதுபற்றி தனக்குத் தெரியாதென்றுஅமைச்சர்கூறினர்

இதற்குக் காரணமான அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் எங்காவது ரெயில் கவிழ்ந்தால் டெல்லியில் இருககிற மந்திரி ராஜிநாமா செய்கிறர் அவா என்ன ரெயிலா ஒட்டுகிறர்.

இருந்தாலும் பொறுப்பை ஏற்று ராஜிநாமா செய் கிறர்கள், சென்ற சட்டமன்றத்திலேயே பைல்கள் எல்லாம் ஒட்டல் வரை போகின்றன என்று கூறினேன். அப்போது அதை யாரும் பொருட்டாக எடுத்துக்கொள்ள வில்லை இப்போது இந்த விவகாரத்தில் அமைச்சர் ஆதித்தனர் பொறுப்பேற்று ராஜிநாமா செய்தால்அவரைப்பாராட்டலாம்.

## சென்னை மார்க்கெட்

சென்னை, டிச. 18—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 525 00

(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 50 00

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1125 00

உள்ளூர் 1095 00

(வெள்ளி 10 கிராம்) ரூ. 11 35

**மணிலாப்பயறு**

மாரிகால பட்டாணி மொத்த விலை ரூ. 295 00

**மணிலா எண்ணெய்**

மொத்தவிலை ரூ. 760 00

சில்லரை விலை ரூ. 8 15

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 590 00

சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 96 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 205 00

முதல் ரூ. 213 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 146 00

விற்பனை வரி தனி

சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 25

**கடலைப்பிண்ணுக்கு**

கி.கி. கொண்ட மூட்டைக்கு 70 எக்ஸ்பெல்லர் ரூ. 82 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 483 00

முதல் ரூ. 485 00

சட்டசபையில் சூடான விவாதம்:

# நாங்கள் பைத்தியமா? மணலி கந்தசாமியிடம் தங்கமணி கேள்வி

சென்னை, டிச. 18—நேற்று சட்டசபையில மணலி கந்தசாமி பேசிக்கொண்டிருக்கும்போது கே. டி. கே. தங்கமணி குறுக்கிட்டு, நாங்கள் எல்லாம் பைத்தியக்காரர்களா என்று கேட்டார்.

அரிசிம்புரம் சம்பந்தப்பட்ட 'பைல்' பற்றி மணலி கந்தசாமி குறிப்பிடும்போது, தங்கமணிக்கும் அவருக்கும் கடும் விவாதம் ஏற்பட்டது.

இது குறித்து மணலி கந்தசாமி பேசியதாவது:—

இரண்டு தீர்மானங்களையும் ஒன்றாக விவாதிக்க எதிர்க்கட்சிகள் ஒத்துக்கொண்டது சரியல்ல.

முதல்தடவையாக அரசு ஒரு நல்ல காரியம் செய்திருக்கிறது. அரிசி மொத்த வியாபாரத்தை ஏற்று இருப்பது நல்ல காரியம்.

பம்ப் செட்டுக்களை அரசே வாங்கி எங்கு யாருக்குத் தேவையோ அங்கு வாடகைக்குக் கொடுக்கவேண்டும்.

குறுவை கொள்முதலில் நாம் தவறி இருக்கிறேம். இதுபற்றி விசாரிக்கவேண்டும்.

உற்பத்தி செய்யும் விவசாயிகளைக் கவரக்கூடிய நியாயமான விலையை நிர்ணயிக்க வேண்டும்.

கையிருப்பில் வைத்திருக்கும் அரிசியை எல்லாம் ஒரு தேதி குறிப்பிட்டு எல்லாவற்றையும் அரசிடம் ஒப்படைக்கவேண்டும் என்று உத்திரவிட வேண்டும். இல்லாவிட்டால்அந்த அரிசி வராது.

நெல் கொள்முதலுக்கு நீங்கள் நிர்ணயித்து இருக்கும் விலையையாவது அமல் செய்ய வேண்டும்.

நம்பிக்கை இல்லா தீர்மான விவாதத்தைப்பார்க்க சங்கடமாக இருக்கிறது. எனக்கு எல்லாம் வயதாகிவிட்டது. உதவி சபாநாயகராக இருப்பவர் பெஞ்ச்மேல் ஏறி நிற்பது வேதனையாக இருக்கிறது.

பேச்சுக்கள் ஒரு எல்லைக்குள் உட்பட்டு இருக்கவேண்டும். பேச்சுக்களைப் பார்க்கும்போது வேதனையாக இருக்கிறது. சபை நன்றக நடக்க வைப்பது நமது கடமை.

சில சந்தர்ப்பங்களில்ஆளும் கட்சி எதிர்க்கட்சி உறுப்பினர்களால் உரிமைகள்மீறப்பட்டு இருக்கின்றன.

நம்பிக்கையில்லாத் தீர்மானத்தில் ஒவ்வொரு தடவையும் பேசப்பட்டதுதான் பேசப்படுகிறது.

புதிய அம்சம் மதிப்பீட்டுக் குழு அறிக்கைதான். அந்த அறிக்கை முதலமைச்சர் நிர்வாகத்திற்குப் பெருமை தரக் கூடியது இல்லை.

பைலில் என்ன இருக்கிறது, ஒன்றுமில்லை. விஷயம்தான் தெரிந்திருக்கிறதே.

### நாங்கள் பைத்தியமா?

தங்கமணி; பைலில் ஒன்றுமில்லை என்கிறர். பார்த்த நாங்கள் எல்லாம் பைத்தியக்காரர்களா?

மணலிகந்தசாமி;ரிப்போர்ட்டில் இல்லாத எதைக் கண்டு பிடித்திருக்கிறீர்கள்?

இதில் வாதம் செய்ய ஒன்றும் இல்லையே. அறிக்கை வந்தாச்சு இதுபற்றி முதல்வர்தான் முடிவு செய்யவேண்டும்.

முதலமைச்சர் நிச்சயமாக ஒரு முடிவுக்கு வர வேண்டும். அதில் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் இப்போது எங்கே இருக்கிறர்கள்? ஏதாவது நடவடிக்கை எடுக்கப்பட்டதா? முதல்வர் பதில் அளிக்கும்போது தெரிவிக்க வேண்டும்.

அப்படி எந்த நடவடிக்கையும் எடுக்காவிட்டால் இனி மேலாவது நடவடிக்கை எடுக்க வேண்டும்.

ரிப்போர்ட் அம்மணமாக- அப்பட்டமாக இருக்கிறது.

### சிறந்த ஆட்சி

உங்கள் ஆட்சியில் பல நன்மைகள் நடந்து இருக்கின்றன. இந்தியாவிலேயே சிறந்த ஆட்சி என்று கூறப்படும் இந்த ஆட்சிக்கு இது ஒரு அவப் பெயரை உண்டாக்கி இருக்கிறது.

இன்னும் ஒரு ஆண்டு இருக்கிறது. உங்கள் தவறுகளை திருத்திக்கொள்ள வேண்டும். புதிய அபிப்பிராயத்தை உருவாக்கிக் கொள்ள வேண்டும். பலநல்லகாரியங்களைமுதல்வர் செய்து இருக்கிறர். முதலில் உங்கள் கட்சியை ஒழுங்குபடுத்துங்கள். தவத்றைத்திருத்திக் கொள்ளுங்கள் என்று அவரைக் கேட்டுக் கொள்கிறேன்.

மதிப்பீட்டுக்குழு அறிக்கை பற்றி ஒரு முடிவு எடுக்க வேண்டும். ஒரு ஊனம் ஏற்பட்டு இருக்கிறது. இதில் குறைந்தபட்சம் என்ன நடவடிக்கை எடுக்க முடியுமோ அதைச் செய்யவேண்டும்.

ஆளும் கட்சி நன்கு கவனிக்கப்படவேண்டிய நிலை இருக்கிறது. 76ல் தேர்தல் வர இருக்கிறது. அதற்குள் இறங்கு, இறங்கு என்று சொல்கிறீர்கள். இதைக் கேட்டு அலுத்துப் போச்சு.

இவ்வாறு மணலி கந்தசாமி பேசினர்.

ஆந்திராவில்

65 தொழிற்சாலைகளுக்கு நோட்டீஸ்

# உள்ளூர்காரருக்கு வேலை அளிக்காதது ஏன்? அரசு நடவடிக்கை

**ஹைதராபாத், டிச. 18—"ஆந்திராவைச் சேர்ந்தவர்களுக்கே வேலை அளிக்கவேண்டும் என்ற உத்தரவை மீறியது ஏன்?" என்று காரணம் கேட்டு 65 தொழிற்சாலைகளுக்கு ஆந்திர அரசு நோட்டீஸ் அனுப்பியுள்ளது.**

இந்த 65 தொழிற்சாலைகளும் தனியார் துறையையும் பொதுத்துறையையும்சேர்ந்தவை.

உள்ளூர்களில் உள்ள வேலை தேடித்தரும் நிலையங்கள் அனுப்புகிறவர்களை வேலைக்கு அமர்த்திக்கொள்வது சம்பந்தப்பட்ட, குறிப்பாக மாதம் ரூ.500க்குக் குறைந்த சம்பளம் உள்ள வேலைகளுக்கு அமர்த்திக்கொள்வது சம்பந்தப்பட்ட உத்தரவுகளை இத் தொழிற்சாலைகள்மீறியுள்ளன என்று ஹைதராபாத்தில் ஆந்திர மாநில தொழிலாளர் நல மந்திரி அஞ்சையா நிருபர்களிடம் பேசுகையில் கூறினர்.

"தகுதி பெற்றவர்கள் உள்ளூரில் கிடைக்கவில்லை என்று இவை கூறுகின்றன. ஆனல், உண்மையில் ஐ. டி. ஐ. பரீட்சையில் தேறி சர்டிபிகேட் பெற்றுள்ள 14,926 பேரின் பட்டியல் என்னிடம் தயாராக உள்ளது" என்றும் மந்திரி கூறினர்.

"ஆனல் இத் தொழிற்சாலைகள் தகுதிபெற்ற உள்ளூர்க்காரர்களைப் புறக்கணித்து வெளி மாநிலத்தவருக்கு வேலை அளித்து வருகின்றன" என்றும் மந்திரி சொன்னர்.

உள்ளூர்க்காரர்களுக்கே வேலை அளிக்க வேண்டும் என்ற விதியை மீறும் தொழிற்சாலைகள் மீது அரசாங்கம் வழக்குப் போட முடியும் என்று அவர் தெரிவித்தார்.

# பட்நாயக் வீட்டில் சோதனை

புதுடெல்லி, டிச. 18— ஒரிசாவின் முன்னுள் முதலமைச்சரான பட்நாயக் வீட்டில் திடீர் சோதனை நடத்தப்பட்டதில், 16 லட்சம் ரூபாய் மதிப்புள்ள சொத்துக்களும் தஸ்தாவேஜிகளும் கைப்பற்றப்பட்டன

மக்கள் கட்சி தாக்கு:

# "எந்த நேரத்திலும் இந்திராவை தூக்கி எறியும் கம்யூனிஸ்டு"

மதுரை, டிச: 18—எந்த நேரத்திலும் பிரதமர்இந்திராவைத் தூக்கி எறிந்து விட்டு கம்யூனிஸ்டு கட்சிஆட்சியைப் பிடித்தாலும் ஆச்சரியமில்லை என்று இந்திய மக்கள் கட்சியின் தமிழ்நாட்டுக் கிளைத் தலைவர் சி. டி. ராஜகோபால் கூறினர்.

மதுரை வந்திருந்த அவர் இது குறித்துவெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

இந்திரா மந்திரிசபையில் கம்யூனிஸ்டுகள் ஊடுருவியுள்ளனர். மறைமுகமாக செயல்பட்டு, இந்தியாவில் கொந்தளிப்பான நிலையை உருவாக்கி வருகிறர்கள். எந்த நேரத்திலும் இந்திராவைத் தூக்கி எறிந்துவிட்டு, கம்யூனிஸ்டு கட்சியினர் ஆட்சியைப் பிடித்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. இந்தியாவை கம்யூனிஸ்ட் நாடாக்கவேண்டும் என்பதற்காக அவர்கள் ரகசிய முயற்சிகளில்ஈடுபட்டுள்ளனர்.

### அரசியல் தெரியாத எம். ஜி. ஆர்.

தமிழ்நாட்டில் தி. மு. கழகம் ஆட்சிக்கு வந்தபிறகு கம்யூனிஸ்டு கட்சியின் பலம் அடியோடு ஒடுக்கபபட்டுவிட்டது. ஆனல் அரசியல் தெரியாத நடிகர் எம், ஜி. ராமச்திரன் தன் சுயநலத்திற்காக கம்யூனிஸ்டுகட்சியுடன் கொஞ்சிக் குலாவிக் கொண்டிருக்கிறர். அவர்களுக்கு தமிழ் நாட்டைக் காட்டிக்கொடுக்கிறர்.

இந்தியாவில் ஏற்பட்டுள்ள கொந்தளிப்பு நிலை மாற, கம்யூனிஸ்ட் கட்சிக்கு தடை விதிக்கவேண்டும். இவ்வாறு சி. டி. ராஜகோபால் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

# சட்டசபைக்கு வராத எம். ஜி. ஆரை என்ன செய்வது?

சென்னை, டிச. 18— குறித்த நேரத்தில் சட்டசபைக்கு வராத அமைச்சர்களுக்கு அபராதம் விதிக்க வேண்டும் என்று, அ.தி.மு.க. உறுப்பினர் கோவை செழியன் இன்று கருத்து தெரிவித்தார்.

கேள்வி நேரத்தின் போது இன்று சில அமைச்சர்கள் சபைக்கு நேரங்கழித்து வந்தனர். இதனல் இவர்களின் கேள்விகளை ஒத்திவைக்க நேரிட்டது.

இப்படி நடைபெறுவது சரியல்ல என்று கூறிய சபாநாயகர் புலவர் கோவிந்தன், குறிப்பிட்ட கேள்விக்கு பதிலளிக்க வேண்டிய அமைச்சர்களாவது முதலிலேயே சபைக்கு வரவேண்டும் என்று கூறினர்.

சபாநாயகரின் கருத்தை வரவேற்ற கோவை செழியன் கர்நாடக மாநிலத்தில் தாமதமாக வரும் அமைச்சர்கள் அபராதம் கட்டவேண்டும் என்ற நிலை இருக்கிறது. அதேபோல் இங்கேயும் அபராதம் விதிக்க ஏற்பாடு செய்யப்படுமா என்று கேட்டார்.

உடனே முதலமைச்சர் கருணநிதி "அபராத விதியை உறுப்பினர்களுக்கும் பொருந்தும்படிச் செய்தால் நிறைய தொகை வசூலாகும்" என்று கூறினர்.

உடனே அமைச்சர் அன்பழகன் குறுக்கிட்டு "தாமதமாக வருபவர்களுக்கு அபராதம் விதிக்கலாம்" ஆனல் சபைக்கு வராமலேயே இருப்பவர்களை (எம. ஜி. ஆரை) என்ன செய்வது? என்று கேட்டதுடன் பிரச்சினை ஓய்ந்தது.

சபைக்கு தாமதமாக வந்ததற்காக அமைச்சர் ஆதித்தனர் இன்று மன்னிப்புக் கேட்டுக்கொண்டார்.

அமைச்சர்கள் தாமதமாக வருவது குறித்து இன்று சட்டசபையில் பிரச்சினை எழுப்பப்பட்டதல்லவா?

தமது கேள்விக்குப் பதிலளிக்கும முறை வந்தபோது அமைச்சர் தாம் தாமதமாக வந்ததற்கு முதலில் மன்னிப்பு கேட்பதாக தெரிவித்தார்.

# இந்தியாவிலேயே சிறந்தது தமிழக அரசு: சத்தியவாணி பாராட்டு

சென்னை, டிச. 18—இந்தியாவிலேயே பகுத்தறிவு கொள்கையை திட்டமிட்டு, சிறப்பாகச் செயல்படுத்தும் அரசு தமிழக அரசுதான் என்று தாழ்த்தப்பட்டோர் முன்னேற்றக் கழக பொதுச் செயலாளர் சத்தியவாணி முத்து கூறினார்.

இந்திய பகுத்தறிவாளர் சங்கத்தின் 8-வது மாநாடு சென்னை மத்திய நூலக மண்டபத்தில் நடைபெறுகிறது. வரும் 26 முதல் 28-ந் தேதிவரை நடைபெறும் இம்மாநாட்டின் வரவேற்புக்குழு தலைவராக சத்தியவாணிமுத்து பொறுப்பேற்றிருக்கிறார். 1949 டிசம்பர் மாதம் துவங்கிய இந்திய பகுத்தறிவாளர் சங்கத்தின் செயற்குழு உறுப்பினர்களாக அறிஞர் அண்ணா, அமைச்சர் அன்பழகன், எம். என். ராய் ஆகியோர் இடம் பெற்றிருந்தது குறிப்பிடத்தக்கது. நேற்று மாலை நடைபெற்ற நிருபர்கள் கூட்டத்தில் சங்கத்தின் பொதுச்செயலாளர் ஜோதி சங்கர், துணைத்தலைவர் சூரியநாராயணன் எஸ். எல். பாரதி, ஜியாயுடீன், பாலசுந்தரம் ஆகியோர் பகுத்தறிவாளர் சங்கத்தின் கொள்கைகள் மாநாட்டின் முக்கியத்துவம் பற்றிவிளக்கினர். இந்த மாநாடு இந்திய பகுத்தறிவாளர் சங்கத்தின் வெள்ளி விழாவாகவும் கொண்டாடப்படுகிறது. சத்தியவாணிமுத்து பேசும் போது கூறியதாவது:—

பகுத்தறிவுக் கொள்கைகளை திட்டமுடன் செயல்படுத்தியதில் அரசு இந்தியாவிலேயே தமிழ்நாடு அரசு ஒன்றுதான். தீண்டாமை ஒழிப்பு, கலப்பு திருமணம், புராண இதிகாச மூடப் பழக்கங்கள் ஆகியவை பற்றி பரம்பரையாக நாட்டம் செலுத்திவந்த இயக்கத்தின் அரசுதான் இன்றைய தமிழக அரசு. ஆனால் செயல் முறையில் சிலதவறுகள் நடைபெற்றதை கண்டித்ததினால் தான் நான்வெளியேற்றப்பட்டேன். கலப்புத் திருமணம் செய்துகொள்பவர்கள்கூடதங்கள் குழந்தைகளை கலப்புத் திருமணம் செய்துகொடுக்க முன் வருவதில்லை. தங்களின் ஜாதி மற்றவர்களுக்கு தெரிந்து விடுமோ என்று அஞ்சுகிறார்கள்.

மாம்பலத்தில் "டிமரி பிள்ளையார்" தோன்றுவதற்கு கே. எம். சுப்ரமணியம் காரணமாயிருந்தார். சிலுவை குழந்தை, "மரத்தில் பால் வடிகிறது" போன்றவற்றை மக்கள் இன்னும் நம்புவது வருந்தத்தக்கது என்றார் சத்தியவாணி முத்து.

முன்னர் பேசிய ஜோதிசங்கர், "எவரேனும் கடவுள் இருப்பதாக நிரூபித்துவிட்டால் 1 லட்சம் ரூபாய் சன்மானம் அளிக்கவும் இந்திய பகுத்தறிவாளர் சங்கம் தயாராக இருக்கிறது" என்றார்.

இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் பிரதிநிதிகள் கலந்து கொள்ளும் இம்மாநாடு 25-ம் தேதி காலை 10 மணிக்கு மறைந்த பகுத்தறிவுத்தந்தை பெரியார் ஈ. வெ. ரா.வின் சமாதியின்மீது மலர் வளையம் வைத்து மரியாதை செலுத்தி துவங்குகிறது. பகுத்தறிவுக் கொள்கைகளை விளக்கும் உரையாடல், கருத்தரங்கு ஆகியவைகள் மாநாட்டில் இடம்பெறுகின்றன.

## ராஜாஜிக்கு சேலத்தில் சிலை வைக்க கமிட்டி அமைப்பு

சேலம், டிச 18—சேலம் நகரில் மூதறிஞர் ராஜாஜிக்கு சிலை வைக்கவும், தேசபக்தர் சுப்ரமண்ய சிவாவிற்கு நினைவுச்சின்னம் அமைக்கவும் சேலம் தொழிலதிபர் ஜெ ஆர். மேத்தா தலைமையில் ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது. இக்குழுவின் துணைத் தலைவர்களாக ஜி. கே. சுந்தரம் (சுதந்திராக் கட்சி) பி. கஸ்தூரி பிள்ளை (அமைச்சர் ராசாராம் தகப்பனார்)யும் வீரி செட்டி, தியாகி பவானி சிங் ஆகியோர் செயலாளர்களாகவும். தொழிலதிபர் சத்சி நாராயணன் பொருளாளராகவும் கொண்ட கமிட்டி அமைக்கப்பட்டுள்ளது.

ஒரு லட்சம் ரூபாய் திரட்டி நினைவுச் சின்னம் எழுப்ப ஏற்பாடு செய்யப்படும் எனதியாகி பவானி சிங் கூறினார்.

பால் விலை உயர்வு

## மீண்டும் தடைபோட கோர்ட்டில் கோரிக்கை

சென்னை, டிச. 18—மாதவரம் பால்பண்ணை நிர்வாகிகள் பால் விலையை உயர்த்தியுள்ளதை தடை செய்து மீண்டும் உத்தரவிட வேண்டும் என்று கோரி சென்னை 6-வது சிவில் கோர்ட்டில் இன்று மீண்டும் மனுபோடப் பட்டுள்ளது.

பால் விலை உயர்வுக்கு இக்கோர்ட் சில தினங்களுக்கு முன்னர் இடைக்கால தடைபோட்டது. பிறகு பால்பண்ணை நிர்வாகிகள் தாக்கல் செய்த மனுவை கோர்ட்டில் ஏற்று இந்த இடைக்கால தடை உத்தரவை நேற்று ரத்து செய்தது.

இதை எதிர்த்து இன்று வழக்கறிஞர் வி. பி. குமாரவேலு புதிதாக ஒரு மனுவைத் தாக்கல் செய்து மறுபடி தடை விதிக்கக் கோரியுள்ளார்.

இடைக்கால உத்தரவை கோர்ட் ரத்து செய்தால் எனக்கும், என்போன்ற மாதவரம்பாலை பயன் படுத்துவோருக்கும் நஷ்டம் ஏற்படுகிறது. பால் உபயோகிப்பாளர்களுக்கும் மாதவரம் பால்பண்ணைக்கும் இடையே பால் விற்பனை பால் வாங்குதல் குறித்து ஒப்பந்தம் உள்ளது, அந்த ஒப்பந்தத்தைமீறி மாதவரம் பண்ணைநிர்வாகம் பால விலையை உயர்த்தியுள்ளது. ஒப்பந்தத்தை மீற அதற்கு உரிமை இல்லை. எனவே இடைக்காலத் தடையை நீக்கி தற்காலிகமாக போட்ட உத்தரவை ரத்து செய்ய வேண்டும்" என்று குமாரவேலு கோரியுள்ளார்.

## அரிசி லாரி பிடிபட்டது: 5பேர் கைது

சென்னை, டிச. 18—சென்னை கோடம்பாக்கத்தில் நேற்று விடியற்காலை ஒரு அரிசி லாரி திடீரென்று பிடிபட்டது. இது சம்பந்தமாக லாரி டிரைவரும், லாரியில் இருந்த வேறு 4 பேர்களும் கைது செய்யப்பட்டனர்.

பர்மிட் இன்றி அரிசியைக் கொண்டு வந்ததாக அந்த 5 பேர் மீது வழக்கு பதிவு செய்யப்பட்டுள்ளது.

பூந்தமல்லிக்கு அருகே உள்ள பேட்டை கிராமத்திலிருந்து அந்த அரிசி சென்னைக்கு கொண்டு வரப்பட்டதாக கூறப்படுகிறது.

லாரியும், லாரியில் இருந்த 90 மூட்டை அரிசியும் கைப்பற்றப்பட்டன.

சென்னை நகரில் நடந்த அகில இந்திய போலீஸ் விளையாட்டுப் போட்டிகளில் தமிழ் நாடு போலீஸ் படை வென்ற விருதுகளை முதலமைச்சர் கருணாநிதி பார்வையிட்டார்.

மேல்சபையில் சூடான விவாதம்

# அதிகாரம் இல்லாத முதல்வர் கருணாநிதி: மந்திரி மன்னை விளக்கம்

**சென்னை, டிச. 18—விவசாயிகளிடம் நாம் நிர்ணயித்த விலைக்கு நெல்லை வாங்கும் அதிகாரம் கூட நம்முடைய முதல்வருக்கு (கருணாநிதிக்கு) கிடையாது. என்று உணவு அமைச்சர் மன்னை நாராயணசாமி நேற்று மேல் சபையில் கூறினார்.**

நாம் லெவிக்கு ரூ 86 என்று நிர்ணயித்தோம். மத்திய அரசு ரூ 74 போட்டு உத்தரவிட்டிருக்கிறது. இனி விவசாயிகள் இந்த விலைக்குத் தான் விற்கமுடியும் என்றும் மந்திரி மன்னை கூறினார்.

மத்திய அரசின் இந்த விலை நிர்ணயச் சட்டத்தை மீறக் கூடாதா என்று அப்போது சாமிநாதன் (எம் எல் சி) கேட்டார்.

அதற்கு முதல்வர் கருணாநிதி பதில் அளித்தபோது, அப்படி மீறுவது என்றால், தமிழ்நாட்டைப் பிரித்துத்தான் கேட்க வேண்டும. அதற்கு நாம் தயாராக இல்லை என்று குறிப்பிட்டார்.

உணவுப் பிரச்னை பற்றிய விவாதத்திற்குப் பதில் அளித்து மந்திரி மன்னை பேசும்போது கூறியதாவது:-

உணவுப் பிரச்சினைபற்றி. ஆளும்கட்சி எதிர்க்கட்சி என்ற பாகுபாடின்றி இங்கு விவாதிக்க அனுமதிக்கப்பட்டதிலிருந்தே முதல்வருக்கு அப்பிரச்சினை மீதுள்ள அக்கறை விளங்கும். எதிர்க்கட்சியில் இருந்தபோதே புயலால். தீவிபத்தால் மக்கள் பாதிக்கப்பட்டபோது எல்லாம் இன்றையநமது முதல்வர் வந்துபார்த்து உணவுவழங்கிய பெருமைக்குரியவராவார்.

தமக்கு வினைத் தெரிந்த காலம் முதலே இந்த அளவுக்கு உணவுப் பிரச்னை இருந்ததில்லை என்று எதிர்க்கட்சித் தலைவர் சொன்னார். இது தமிழ்நாட்டில் மட்டுமோ இந்தியாவில் மட்டுமோ இருக்கிற நிலைமை அல்ல. அகில உலகிலும் இருக்கிற நிலையாகும்.

### கேலி செய்யும் பத்திரிகைகள்

இதனால்தான் ரோம் நகரில் உலக உணவு மாநாடு கூடி ஆலோசித்தது. உலக உணவு உற்பத்தி குறைந்திருப்பதே இந் நிலைக்குக் காரணம் என்று அங்கே குறிப்பிடப்பட்டிருக்கிறது.

கடந்த மார்ச் மாதம் இந்த மன்றத்தில் முதல்வர் பேசுகிறபோது—சிறு தான்யக் கட்டுப்பாட்டை எடுத்தால் பஞ்சம் வரும் என்று சொன்னார்.

சில பத்திரிகைகள் கூட அன் அதைக் கேலி செய்து எழுதின.

எதிர்கால உணவு நெருக்கடி பற்றி உணர்ந்தே முதல்வர் அன்று இந்தக் கருத்தைத் தெரிவித்தார். டெல்லியிலே நடந்த உணவு அமைச்சர்கள் மாநாட்டிற்கு என்னையும் அனுப்பி வைத்தார். நானும் அதிலே போய்க் கலந்து கொண்டு விட்டு வந்து விவரம் தெரிவித்தேன்.

விவசாயிகளை நாங்கள் உற்சாகப்படுத்தாததே இந்நிலைக்குக் காரணம் என்று இங்கே பேசப்பட்டது.

### விவசாயிகள் பெற்ற நன்மை

வேளாண்மைத் தொழில் வளர்ச்சிக்காக 1966-67-ல் மாத்திரம் விவசாயிகளுக்கு கூட்டுறவு வங்கிகள்மூலம் 31.44 கோடி ரூபாய் கடனாக அளிக்கப்பட்டிருக்கிறது. இன்று அது 77.97 கோடியாக இருக்கிறது.

973-74-ல் மட்டும் நில வள வங்கி மூலம 20.97 ரூபாய் கடன் வழங்கப்பட்டிருக்கிறது. 7 லட்சம் பம்ப் செட்டுகள் போட்டுத் தரப் பட்டிருக்கிறது.

விவசாயிகளுக்கு உரம் வழங்குவதிலே கூட அதிகமானவர்களுக்குக் கிடைக்க வகை செய்யும் முறையில் 40 சதவீதம் என்ற வகையில் தரப்படுகிறது.

இவ்வளவு உதவிகளைச் செய்திருக்கிற இந்த அரசு விவசாயிகளுக்கு ஊக்கமளிக்கவில்லை என்பது எப்படிப் பொருந்தும?

விலையேற்றத்திற்குக் காரணமே மத்திய அரசுதான் என்பது சற்று நிதானமாக யோசித்துப் பார்த்தால் தெரியும்.

### கருணாநிதி-சாமிநாதன் விவாதம்

நாம் லெவிக்கு ரூ. 86 என்று நிர்ணயித்திருந்தோம் ஆனல் மத்திய அரசு ரூ. 74 போட்டு உத்தரவிட்டிருக்கிறது. இனி விவசாயிகள் இந்த விலைக்குத் தான் விற்கமுடியும். நாம் நிர்ணயித்த விலைக்கு வாங்கும் அதிகாரம் கூட நம்முடைய முதல்வருக்கு இல்லை என்றநிலை இருக்கிறது,

சாமிநாதன்: (குறுக்கிட்டு மத்திய அரசின் விலை நிர்ணய சட்டத்தை மீறக்கூடாதா?

முதல்வர்: சட்டத்தைமீறக் கூடாதா என்று சாமிநாதன் கேட்கிறார் அப்படி சட்டத்தை மீறுவதென்றால், தமிழ்நாட்டைத்தான் பிரித்துக் கேட்க வேண்டும். இதற்கு சாமிநாதன் தயாராக இருக்கலாம். ஆனல் நாம் தயாராக இல்லை. டெல்லி சர்க்காரின் விலை நிர்ணய சட்டத்தை மீறினல் என்ன செய்வார்கள் என்று கேட்கலாம். சும்மா தான் இருப்பார்கள். பிறகு நாம் லட்சம் டன் உணவு உதவி கேட்கிறபோதும் சும்மாதான் இருப்பார்கள்.

உணவு அமைச்சர் மன்னை: இன்று உணவுப் பிரச்னை இந்த அளவுக்கு ஆகியிருப்பதன் காரணமே போதுமான மழை இல்லை என்பதுதான். போதுமான மழை இல்லாத காரணத்தால் பொன்னி என்ற நெல்லைக்கூட சென்ற ஆண்டில் சரியான முறையில் பயிரிட முடியவில்லை.

சிறு தானியத்தின் விலை

7-ம் பத்தி பார்க்க

# "புரட்சி" சாமியார் கைது: மந்திரி ஆபீஸ் மீது குண்டு வீசியவர்

புதுடெல்லி டிச. 18—மத்திய மந்திரி சவான் ஆபீஸ் மீது குண்டு வீசியதாக சாமியார் ஒருவர் கைது செய்யப்பட்டார்.

அந்தச்சாமியார், தன்னை ஒரு "புரட்சிக்காரன்" என்று கூறிக்கொண்டார்.

இந்த பரபரப்பான சம்பவம் பற்றிய விவரம் வருமாறு:—

மந்திரிகளின் ஆபீசுகளுள்ள தலைமை செயலகம் டெல்லியில் உள்ளது. அங்கு நேற்று மாலை 5-10 மணிக்கு ஒரு சாமியார் வந்தார்.

அந்த கட்டிடத்தில் மத்திய மந்திரி சவான் ஆபீசு அருகே வந்து ஒரு அதிகாரியைப் பார்க்க வேண்டும் என்று கூறினர். ஆனல் அங்கிருந்த வரவேற்பாளர் அந்த சாமியாரை வேறுவாசல் வழியாக போகும்படி கூறினர்.

ஆனல் அதை அந்த சாமியார் கேட்காமல் வேகமாக ஆபீசுக்குள் நுழைந்தார்.

அங்கிருந்தவர்கள் அவரை தடுத்து நிறுத்த முயற்சி செய்தபோது சுவரை நோக்கி அவர் ஒரு வெடிகுண்டை வீசினர். ஆனல் அந்த குண்டு வெடிக்கவில்லை.

உடனே அந்த சாமியார் கைது செய்யப்பட்டார். அவர் பெயர் நிர்வாணந்த சாமி மேற்கு வங்காளத்தை சேர்ந்தவர் என்று தெரிகிறது.

'நான் ஒரு புரட்சிக்காரன்' என்று அந்த சாமியார் கூறினர். அவர் போலீஸ் காவலில் வைக்கப்பட்டார். வெடிகுண்டு நிபுணர்கள் அந்த வெடிகுண்டை கைப்பற்றி பரிசோதனை நடத்தினர்கள்.

6-ம் பத்தி தொடர்ச்சி

பம்பாயில் ரூ. 150 என்றிருந்தது. அப்போது தமிழகத்தில் விலை ரூ. 89 என்றிருந்தது கட்டுப்பாட்டை மத்திய அரசு எடுத்துவிட்ட பிறகு பம்பாய் விலை ரூ. 135 ஆகவும், இங்கு விலை ரூ. 128 ஆகவும் ஆகிவிட்டது. ஏன் இந்த நிலை வந்தது?

அந்தக் கட்டுப்பாட்டை மத்திய அரசு நீக்கியதால் தானே இந்த நிலை?

### பேச மறுப்பது ஏன்?

இங்கே எங்களைப் பார்த்து நாளுக்கு ஒரு உத்தரவா என்று கேட்கிறவர்கள், கட்டுப்பாட்டை நீக்கியது போன்ற மத்திய அரசின் நடவடிக்கைகள் பற்றி ஏன் பேச மறுக்கிறீர்கள்?

சிறு தான்யத்திற்காக அங்கிருந்து இங்கு வரும் வியாபாரிகளை இங்கே வரக்கூடாது என்று சொல்லவும் எங்களுக்கு அதிகாரம் இல்லை. ஏதேதோ திட்டம் தீட்டி எங்களை அமுக்கிக்கொண்டிருக்கிற மத்திய அரசுதான் விலைவாசி ஏற்றத்திற்குக் காரணமாகும்.

தஞ்சை மாவட்டம் இங்கே கேட்கப்பட்டது.

தஞ்சை மாவட்டத்தில் நெல் எடுத்துப் போக வருகையில் முதலில் காலி லாரி எடை போடப்படுகிறது. பிறகு நெல் மூட்டைகளைக் கொள் முதல் அதிகாரியே எடை போட்டு சீல் வைக்கிறார், ஏற்றப்பட்டுள்ள மூட்டைகள் எத்தனை? அவை எங்கே கொண்டு போகப்படுகின்றன என்பதெல்லாம் எழுதப்பட்டு அதில் ஒரு காப்பி டிரைவரிடம் தரப்படுகிறது. பிறகு குடோனில் கொண்டு போன பிறகு இரண்டு பூட்டு போட்டு பூட்டப்படுகிறது. ஹல்லிங் ஏஜெண்டிடம் ஒரு சாவியும், அதிகாரியிடம் ஒரு சாவியும் இருக்கும்.

தவறான வழியில் நடக்கின்ற வியாபாரிகளுக்கு நாங்கள் சலுகை காட்டுகிறோம் என்றார்கள். அது தவறு வியாபாரிகளுக்கு எந்தவித சலுகையும் காட்டப்படவில்லை.

### எங்கள் தலையில் விழுகிறது

கூட்டுறவுத் துறை பற்றி பயங்கரமானமுறையில் கேலிசித்திரமெல்லாம் போடுகிறார்கள். 1904-ல் தோன்றிய கூட்டுறவுத் துறையில் யார் யார் சாப்பிட்டதெல்லாமோ எங்கள் தலையில் விழுகிறது.

அண்மையில் திருச்சி சென்றிருந்த நான் அங்குள்ள சிந்தாமணியில் ஒரேநாளில் ஒருலட்சத்து எழுபதாயிரத்திற்கு வியாபாரம் நடந்திருப்பதைப் பார்த்தேன். அந்த அளவில் இன்றையதினம் கூட்டுறவுத் துறை சிறப்பாகச் செயல்படுகின்றது.

தனியார் துறை சரிப்படவில்லை என்று இப்போதுதான் கூட்டுறவுத் துறைகளை ஊக்குவித்து வருகிறோம். அதையும் சந்தேகித்தால் எப்படி? மீண்டும் தனியார் துறையிடமே விட்டுவிடலாமா என்றாவது சொல்லுங்கள்.

"மிசா" சட்டம்பற்றி இப்போதுதான் பத்திரிகைகளெல்லாம் புதிது போல் பெரிதுபடுத்துகின்றன.

ஆனல் நாங்களோ அந்தச் சட்டத்தின் கீழ் 1973-ல் உணவு கடத்திய 31 பேரைக் கைது செய்திருக்கிறோம். 123 பேர் மீது வழக்குத் தொடுத்திருக்கிறோம். 1974-ல் 17 பேரைக் கைது செய்திருக்கிறோம். 348 பேர் மீது வழக்குகள் போட்டிருக்கிறோம்.

### மேலும் 2பேர் கைது

இன்று காலையில்கூட மிசா' சட்டத்தின் கீழ் மண்ணச்சநல்லூரில் ஜெயபாலன் என்பவரும், திருச்சியில் அருமைநாயகம் என்பவரும் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

உணவுக் கடத்தலைத் தடுக்க கடுமையான நடவடிக்கைகள் எடுத்து வருகிறோம். கடத்தலைத் தடுப்பதற்காகவே 120 பேர் கொண்ட 6 'பட்டாலியன்'கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இவ்வாறு மந்திரி மன்னை நாராயணசாமி கூறினார்.

# ரூ. 1½ கோடி அரிசி கடத்தல் வழக்கு: 7-ந்தேதி விசாரணை

சென்னை, டிச. 18—சுமார் 1½ கோடி ரூபாய் அரிசி கடத்தல் வழக்கு சம்பந்தமாக சென்னை கோர்ட்டில் விசாரணை ஜனவரி 7-ந் தேதி ஆரம்பமாகும்.

தமிழ்நாட்டிலிருந்து ரூ. 1½ கோடி மதிப்புள்ள அரிசியை கடத்தியதாக சென்னை நகரைச் சேர்ந்த வியாபாரி சுந்தரம்பிள்ளை உள்பட 42 பேர் மீது வழக்கு போடப்பட்டுள்ளது அல்லவா?

இந்த வழக்கு விசாரணை நேற்று எழும்பூர் பிரதம மெட்ரோ பாலிடன் மாஜிஸ்திரேட் ஜான் ஆர்தர் முன்னிலையில் விசாரணைக்கு வந்தது.

குற்றம் சாட்டப்பட்டவர்கள் யாரும் கோர்ட்டுக்கு வரவில்லை.

எனவே வழக்கு விசாரணை ஜனவரி மாதம் 7-ந் தேதிக்கு தள்ளிவைக்கப்பட்டது.

அன்று குற்றம் சாட்டப்பட்ட 42 பேர்களுக்கும் குற்றப் பத்திரிகையின் நகல்கள் கொடுக்கப்படும்.

குற்றம் சாட்டப்பட்டவர்களின் பெயர்கள் வருமாறு:—

1. அசோசியேடட் டிரேடர்ஸ், ஆதியப்ப நாய்க்கன் தெரு, சென்னை, 2. சுந்தரம்பிள்ளை, 3. பரமசிவம்பிள்ளை, 4. எஸ். கல்யாணசுந்தரம், 5. கருப்பசாமி பிள்ளை, 6. சுப்பிரமணியப் பிள்ளை, 7. எஸ். நாராயணன், 8. அரிகிஷன்ஷா, 9. சசிகாந்த்ஷா 10. பிரவீன்ஷா, 11. சத்தியநாராயணன், 12. ஏ. எம. சன்னியப்ப முதலியார், 13. ஏ. எம். கே. ஜம்புலிங்க முதலியார், 14. ஜே. நடராஜன், 15. சுகுமாரன், 16. கே. பி. வெங்கடேச முதலியார், 17. டி. ஆர். மணி, 18. எஸ். ராஜாமணி, 19. சி. ஆர். வெங்கடேச செட்டியார், 20. ஆர். ஜி. ஜீவரத்தினம். 21. ஆர். தாண்டவராயன், 22 ஆர். பி. லிங்கம், 23. வி. ஜெயராமன், 24. என். ராமச்சந்திரன், 25. எஸ். ஆறுமுகம், 26. எம். வேலாயுதம், 27. வி. மாணிக்கம், 28. வி. சண்முகம், 29. கே. கே. பரசுராமன், 30. என். கேசவன், 31. எம். முருகன், 32. எஸ். வெங்கடேசன், 33. ஏ. பாலசுப்பிரமணியன், 34. சங்கரநாராயணன், 35. டி. சாலமன், 36. சுப்பிரமணிய அய்யர், 37. என். ஆர். ராஜகோபாலன், 38. ஏ. ராமதாஸ், 39. வி. சுந்தரம், 40. சுப்பராயலு ரெட்டி, 41. சுப்பிரமணியம், 42. கே. ஜே. சுப்பிரமணியம் ஆகியோர்.

குற்றஞ்சாட்டப்பட்டவர்கள் மீது 356 குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டுள்ளன. போலீஸ் தரப்பில் சுமார் 900 சாட்சிகள் விசாரிக்கப்படுவார்கள்.

# 50 ரூபாய் நோட்டு அச்சடிப்பு: மத்திய மந்திரி தகவல்

புதுடெல்லி, டிச. 18—ஐம்பது ரூபாய் நோட்டுகளை வெளியிட டெல்லி சர்க்கார் முடிவு செய்துள்ளது. இந்த ரூபாய் நோட்டை அச்சிடும் வேலை நடந்து வருகிறது என்று மத்திய மந்திரி பி. கே. முகர்ஜி பாராளுமன்றத்தில் தெரிவித்தார்.

இப்போது 1 ரூபாய், 2 ரூபாய், 5 ரூபாய், 10 ரூபாய், 20 ரூபாய் நோட்டுகள் புழக்கத்தில் உள்ளன.

அதற்குமேல் 100 ரூபாய் நோட்டு இருக்கிறது.

புதிதாக "50 ரூபாய் நோட்டு" வெளியிட டெல்லி சர்க்கார் முடிவு செய்துள்ளது.

இதுபற்றி பாராளுமன்றத்தில், நிதி இலாகா ராஜாங்க மந்திரி பி. கே. முகர்ஜி கூறியதாவது:—

"50 ரூபாய் நோட்டில், என்ன மாதிரி படம்போட வேண்டும் என்பது எல்லாம் தீர்மானிக்கப்பட்டு விட்டது.

இந்த ரூபாய் நோட்டை அச்சிடும் வேலை நடந்து வருகிறது.

வருகிற மார்ச் மாதத்தில் இருந்து, இந்த நோட்டுகள் அரசாங்க அச்சகத்தில் முழுவேகத்தில் அச்சிடப்பட்டு, புழக்கத்தில் விடப்படும்.

இவ்வாறு மந்திரி முகர்ஜி கூறினர்.

ரூ. 200 கோடிக்கு கள்ள நோட்டுகள் புழக்கத்திலிருப்பதாக ஒரு உறுப்பினர் கூறினர்.

அது தவறான தகவல் என்று மந்திரி மறுத்தார்.

கள்ள நோட்டுகள் அச்சிடுவதை கடினமாக்க நவீன முறையில் ரூபாய் நோட்டுகளை அச்சிட ஏற்பாடுகள் செய்யப்படுவதாக அவர் சொன்னர்.

சட்டசபையில் லத்திப் பேச்சு:

# "யார் ஆண்டாலும் அரிசி விலையைக் குறைக்கவே முடியாது"

சென்னை, டிச. 18—'யார் ஆட்சிக்கு வந்தாலும் அரிசி விலையைக் குறைக்க முடியாது." என்று முஸ்லிம் லீக் உறுப்பினர் லத்தீப் நேற்று சட்டசபையில் கூறினர்.

வேண்டுமானல் பணக்காரர்களுக்கு அதிக வரி போட்டு ஒரு 50 கோடி ரூபாய் வசூல்செய்து, மானியம் கொடுத்து குறைந்த விலையில் அரிசி சப்ளை செய்ய முடியும் என்றும் அவர் குறிப்பிட்டார்.

இது குறித்து நேற்று சபையில் அவர் கூறியதாவது:—

மதிப்பீட்டுக்குழு அறிக்கையைத் தந்தவர் யார்? தி.மு. கழகத்தைச் சேர்ந்தவர்தான் தந்திருக்கிறர்.

அதில் இருக்கும் நியாய உணர்வை நாம் புரிந்து கொள்ள வேண்டும். உரிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன.

இதில் நீதி விசாரணை கேட்பது எதற்கு? அப்படி ஒரு கட்டம் தேவை என்றல் அது பொதுக்கணக்கு ஆய்வுக் குழுதான் பரிசீலனை செய்ய வேண்டும்.

பொன்னப்ப நாடார்:-மதிப்பீட்டுக்கமிட்டியும், பொதுக் கணக்குக் குழுவும், தனித்தனி சுதந்திரத் தன்மையைக் கொண்ட ஒரே மாதிரியான கமிட்டிகளாகும் ஆகையால் ஒன்றைப்பற்றி மற்றென்று விவாதிக்க முடியாது.

நெல்லிக்குப்பம் கிருஷ்ண மூர்த்தி:— பொதுக்கணக்கு குழுவின் தலைவராக லத்தீப் இருக்கிறர். எந்தப்பிரச்னையையாவது அவரது பரிசீலனைக்கு விட்டால் அதை அவர் பரிசீலிக்கலாம். அதை விட்டு அவராகவே என்னிடம் தா என்று கேட்பது சண்டை நடக்கும் இடத்திற்கு மாஜிஸ்திரேட் சென்று வழக்கை என்னிடம் கொடுங்கள் என்று கேட்பது போலாகும்.

சபாநாயகர்: லத்தீப் மேலும் இந்தப் பிரச்சினை பற்றிப் பேசவேண்டாம். இது குறித்து தனியாகக் கருத்தரங்கு ஒன்றை நடத்திப் பேசலாம்.

லத்தீப்: இன்று எதிர்க்கட்சியினர் பேச்சுக்களால் அதிகாரிகள் அமைச்சர்களை மதிக்காத நிலை உருவாகியிருக்கிறது. அமைச்சர்கள் என்ன சொல்வது நாங்கள் என்ன கேட்பது என்று கருதுவார்களோ என்று அஞ்சவேண்டியிருக்கிறது. ஆகையால் உறுப்பினர்கள் நன்கு சிந்தித்து புகார்களைக் கூறவேண்டும்.

## அரிசி விலை குறையாது

அரிசி விலையை யார் ஆட்சிக்கு வந்தாலும் குறைக்க முடியாது. வேண்டுமானல் பெரிய பணக்காரர்களுக்கு அதிக வரி போட்டு ஒரு 50 கோடி ரூபாய் வசூல்செய்து மானியம் கொடுத்து குறைந்த விலையில் அரிசி சப்ளைசெய்ய முடியும். அதைத் தவிர அரிசி விலையைக் குறைக்க யாராலும் முடியாது.

இந்த ஆட்சி ஏழைகளுக்கு எவ்வளவோ நன்மைகளைச் செய்திருக்கிறது. ஆனல் துரதிர்ஷ்ட வசமாக இந்த அரிசிப் பிரச்னை ஏற்பட்டுவிட்டது.

பிரச்னைகளில் எல்லாம் கலைஞருக்கும், நாவலருக்கும் பேராசிரியருக்கும்தான் பொறுப்பு உள்ளது என்று கருதக்கூடாது. அவர்களுக்கு பின்னல் உள்ள எல்லோரும் அந்தப் பொறுப்பை உணர்ந்து செயல்படவேண்டும்.

இவ்வாறு லத்தீப் பேசினர்.

## வறட்சியை சமாளிக்கும் தி.மு.க.அரசு

ஈ. எஸ். தியாகராஜன் (த. அ. க.) பேசுகையில் கூறியதாவது:—

1967-க்கு முன்பு இருந்த உணவு நெருக்கடியை கவனித்தால் இப்போது ஏற்பட்டிருப்பது பெரிய நெருக்கடி அல்ல என்பது தெரியவரும்.

அதன்பிறகு தி.மு.க. ஆட்சி பசுமைப் புரட்சியை ஏற்படுத்தி, கேட்பவர்களுக்கெல்லாம் வாரி வழங்கி வந்ததை யாரும் மறுக்கமுடியாது.

இந்தியாவெங்கும் இன்று வறட்சி ஏற்பட்டிருக்கிறது.

தமிழ்நாடு இதைச்சமாளிப்பதில் நல்ல முறையில் செயல்பட்டுவருகிறது.

நெசவாளர் பிரச்னையைத் தீர்க்க ரூ. 2 கோடி ஒதுக்கி இருப்பது பாராட்டுக்குரியதாகும்.

அதேபோல் ஊனமுற்றோர் மறுவாழ்வு திட்டமும, கண்ணொளி திட்டமும, தமிழ் நாடு மட்டுமே செயல்படுத்தி வரும திட்டமாகும.

இந்தியாவிலேயே எந்த மாநிலமும செய்திராத ஒருதிட்டமாகும். பூம்புகார் கப்பல் போக்குவரத்து கழகம் கப்பல் ஓட்டிய தமிழனின் பெருமையை நாம உயர்த்தியிருக்கிறோம்.

தாழ்த்தப்பட்டவர்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கும் திட்டம் மிகச் சிறந்த திட்டமாகும்

இப்படிப்பட்ட திட்டங்களைச் செயல்படுத்திய ஒரு அரசு இதுவரை தமிழ்நாட்டில் இருந்தது இல்லை என்றே கூறலாம்.

இவ்வாறு தியாகராஜன் பேசினர்.

## வர்த்தக ஒப்பந்தம்

புதுடெல்லி, டிச. 18—இந்தியாவும் வங்காள தேஷும் வர்த்தக ஒப்பந்தம ஒன்றைச் செய்துகொண்டுள்ளன.

இரு நாடுகளின் தூது கோஷ்டிகளிடையே 2 நாட்களாக நடந்த பேச்சுகளின் பலனக இந்த ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளது.

உ. பி. சட்டசபையில் பரபரப்பு,

# பயங்கர ரகளை: மந்திரியிடமிருந்து 'பைல்' பறிமுதல்

லட்சுமணபுரி, டிச. 18— உத்தரபிரதேச சட்டசபைக்குள், ஜனசங்க உறுப்பினர்கள், அங்கிருந்த ஒரு மந்திரியைச் சூழ்ந்துகொண்டு அவரிடமிருந்த 'பைலை' பறித்துக்கொண்டு ஓடிவிட்டனர்.

இதனல் ஆத்திரம் அடைந்த இ. காங்கிரஸ் எம். எல். ஏக்களுக்கும் எதிர்க்கட்சி எம். எல். ஏக்களுக்கும் கடும் மோதல் ஏற்பட்டது சபைக்குள்ளேயே கட்டிப்புரண்டு குத்துச்சண்டை போட்டார்கள்.

உறுப்பினர்களின் சட்டைகள் "டார்...டார்..." என்று கிழிகின்ற சத்தம், அங்குள்ள 'மைக்'கில் கேட்டது.

இந்தக் கலவரத்தைச் சமாளிக்க முடியாததால், உடனே சட்ட சபைக் கூட்டத்தைச் சபாநாயகர் தள்ளிவைத்தார்.

எம். எல். ஏக்களின் இந்த ரோஷமான குத்துச்சண்டை பற்றிய முழுவிவரம் வருமாறு:—

உத்தரபிரதேச சட்டசபையின் குளிர்கால கூட்டத்தொடர் நேற்று தொடங்கியது.

முதலில் சுசேதா கிருபாளனி (உத்தரபிரதேச முன்னள் முதல்-மந்திரி) மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து தீர்மானம்நிறைவேற்றப்பட்டது.

### சபாநாயகர் மீது பாய்ச்சல்

உடனே எதிர்க்கட்சி உறுப்பினர்கள் எழுந்து, சமீபத்தில் நடந்த மாணவர் கிளர்ச்சி பற்றி சபையில் விவாதிக்க வேண்டும் என்று கூறினர்கள். இந்த கிளர்ச்சி காரணமாக கைது செய்யப்பட்டுள்ள மாணவர்களை விடுதலை செய்ய வேண்டும் என்றும் அவர்கள் வற்புறுத்தினர்கள்.

இந்த பிரச்சினை மீது விவாதம் நடத்த சபாநாயகர் வாசுதேவ் சிங் அனுமதி மறுத்தார்.

### "பைல்" பறிமுதல்

உடனே ஜனசங்க உறுப்பினர்கள் சபாநாயகரை நோக்கி பாய்ந்து சென்றார்கள்.

மக்கள் கட்சி தலைவர் சரண் சிங், ஜனசங்க தலைவர் எம் பி திரிபாதி இருவரும் ஓடிப்போய் சில உறுப்பினர்களை சமாதானப்படுத்தி அழைத்து வந்து உட்காரச் செய்தார்கள்.

அதன் பின் மற்ற ஜனசங்க உறுப்பினர்கள் ஒருமந்திரியை சூழ்ந்துகொண்டு அவரிடம் இருந்த பைலைப் பறித்துக் கொண்டார்கள்.

### குத்துச்சண்டை; ஒலிபெருக்கி உடைந்தது

இதனல் ஆத்திரமடைந்த ஆளும் கட்சி (இந்திரா காங்கிரஸ்) உறுப்பினர்கள், மந்திரியைப் பாதுகாக்க ஓடினர்கள்.

இதைத் தொடர்ந்து இ. காங்கிரஸ் உறுப்பினர்களுக்கும் எதிர்க்கட்சி உறுப்பினர்களுக்கும் இடையே கைகலப்பு நடந்தது. சரமாரியாக குத்து விட்டுக்கொண்டு கட்டிப்புரண்டு சண்டை போட்டார்கள்.

சட்டசபை, போர்க்களம் போல காட்சி அளித்தது. முதல் மந்திரி பகுகுணா, அவருடைய கட்சி உறுப்பினர்களை சமாதானப்படுத்தி, அவரவர் இடத்தில் போய் உட்காரும்படி கேட்டுக்கொண்டார்.

ஒரே ரகளையாக இருந்ததால், கூட்டத்தை சபாநாயகர் காலவரம்பின்றி தள்ளி வைத்தார். இந்த கலாட்டாவில் 2 ஒலிபெருக்கிகள் உடைந்தன.

விளக்கு கம்பத்தில் ஏறிய

## மின்சார ஊழியர் மின்சாரம் தாக்கி சாவு

சென்னை, டிச. 18— மின்சாரக் கம்பத்தில் ஏறிய மின்சார ஊழியர் ஒருவர் திடீரென்று மின்சாரத்தினல் தாக்கப்பட்டு இறந்தார்.

சென்னை நகருக்கு அருகே உள்ள முகலிவாக்கம் கிராமத்தில் தெரு விளக்கு கம்பம் ஒன்றை பழுது பார்ப்பதற்காக சபாபதி (வயது 45) என்ற மின்சார ஊழியர் அந்தக் கம்பத்தின் மீது ஏறினர்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அவர் திடீரென்று மின்சாரத்தினல் தாக்கப்பட்டு கீழேவிழுந்து இறந்தார்.

பூந்தமல்லி அருகே உள்ள போரூரில் வசித்துவந்த அவருக்கு மனைவியும், மகனும், 2 மகள்களும் இருக்கிறர்கள்.





# இந்திராவின் 3 கட்சி கூட்டணி: காமராஜ் புறக்கணித்தார்

புதுடெல்லி, டிச. 18—இ. காங்கிரசுடன் அ. தி. மு. க., ப. காங்கிரஸ் ஆகிய 3 கட்சிகள் அடங்கிய கூட்டணி அமைய பிரதமர் இந்திரா விருப்பம் தெரிவித்தார். இதை காமராஜர் புறக்கணித்தார்.

டெல்லியில் சென்ற திங்கட்கிழமை யன்று பிரதமர் இந்திரா காந்தியை காமராஜர் சந்தித்து முக்கிய ஆலோசனை நடத்தினர்.

தமிழ்நாட்டு அரசியல் நிலைமை பற்றி இரு தலைவர்களும் விரிவாக விவாதித்தனர்.

தி.மு. கழகத்திற்கு எதிராக புது காங்கிரஸ், பழைய காங்கிரஸ், அண்ணு தி. மு. கழகம் ஆகிய 3 கட்சிகளின் கூட்டணி ஒன்றை அமைக்க வேண்டும் என்று அப்போது காமராஜரிடம் இந்திரா யோசனை கூறியதாகத் தெரிகிறது.

இந்த யோசனை குறித்து காங்கிரஸ் மேலிடம் பரிசீலனை செய்து வருவதாகவும் தெரிகிறது.

ஆனல் அதிமு கழகத்துடன் எவ்வித உறவும் வைத்துக் கொள்ளக்கூடாது என்று இந்திராவிடம் காமராஜர் வற்புறுத்தியதாகத் தெரிகிறது.

தி. மு. கழகத்திற்கும், அண்ணு தி. மு. க.வுக்கும் இடையே முக்கிய கருத்து வேறுபாடு இல்லை என்றும் புது காங்கிரஸ், பழைய காங்கிரஸ் ஆகிய இருகட்சிகள் மட்டுமே கூட்டு சேர்ந்தால், அந்தக் கூட்டு உருப்படியான சாதனை செய்ய முடியும் என்றும் இந்திராவிடம் காமராஜர் கூறிவிட்டதாகத் தெரிகிறது.

காமராஜர் மீண்டும் இந்திராவைச் சந்தித்துப் பேசுவார். பிறகு 20-ந் தேதி சென்னைக்குத் திரும்புவார்.

சேலம் மாவட்டத்தில்

## ஒரு லட்சம் உறுப்பினர்களை சேர்ப்பதற்கு இ. காங்கிரஸ் திட்டம்

சேலம், டிச 18—சேலம் மாவட்டத்தில் ஒரு லட்சம் உறுப்பினர்கள் சேர்ப்பது என்று இ. காங்கிரஸ் நிர்வாகக் குழுக் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

சேலம் மாவட்ட இந்திரா காங்கிரஸ் கமிட்டியின் நிர்வாகக் குழுக் கூட்டத்திற்கு மாவட்டத் தலைவர் கே.எஸ். அர்த்தனரீஸ்வரக் கவுண்டர் தலைமை வகித்தார். செயலாளர் எஸ். எஸ். வேணுகோபால் அனைவரையும் வரவேற்றர்.

சேலம் மாவட்டத்தை காவிரிப் பாசனப்பகுதி நீங்கலாக மீதிப் பகுதியை வறட்சிப் பகுதியாக அறிவிக்க வேண்டும் என்று மாநில அரசையும் நெசவாளர்களுக்கு பட்டு, சுத்தப்பட்டு நியாயமான விலையில் கிடைக்க மத்திய அரசு ஏற்பாடுசெய்ய வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

ஒரு லட்சம் உறுப்பினர்களை சேர்ப்பது, சேலம் மாவட்டத்தில் நகராட்சித் தேர்தல்களில் இ. காங்கிரஸ் சார்பில் வேட்பாளர்களை நியமிப்பது அதற்கான வேலைகளை உடனடியாகத் தொடங்குவது என்றும் இந்தக் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

ஊ. ராஜேந்திரன் நன்றி கூறினர்.

## பஸ்கள் மோதல்: டிரைவர் படுகாயம்

தாம்பரம், டிச 18—நாகப்பட்டணத்திலிருந்து சென்னை நோக்கி வந்து கொண்டிருந்த துரித பஸ் வண்டி ஒன்றும் உத்திரமேரூருக்கு போகும் பஸ் ஒன்றும் எதிர் எதிராக மோதிக் கொண்டன இந்தச் சம்பவம் தாம்பரம் கடப்பேரியில் நடந்தது.

இரண்டும் அரசாங்க பஸ்கள். உத்திரமேரூர் பஸ்ஸை ஓட்டிய டிரைவருக்கு கால்களில் பலத்த காயம் ஏற்பட்டது. பயணிகள் யாருக்கும் காயம் ஏற்படவில்லை. போலீசார் புலன் விசாரணை செய்கிறர்கள்.

ஜனவரி 1-முதல்

## வாக்காளர் பட்டியல் திருத்த அதிகாரிகள் வீடுவீடாக வருகிறர்கள்

சென்னை, டிச. 18— வாக்காளர் பட்டியல்களைத் திருத்துவதற்காக ஜனவரி 1-ந் தேதி முதல் அதிகாரிகள் வீடு வீடாக வந்து பெயர்களை பதிவு செய்வார்கள்.

தமிழ்நாட்டில் 234 சட்ட சபை தொகுதிகள் இருக்கின்றன.

இந்த தொகுதிகளிலுள்ள எல்லா வாக்காளர்களின் புதிய பட்டியல் தயாரிக்கப் படுகிறது. 21 வயதுக்கு மேற்பட்டவர்கள்வாக்காளர் பட்டியலில் தங்கள் பெயரை பதிவுசெய்து கொள்ளலாம்.

பொது மக்களின் வசதியை முன்னிட்டு, வாக்காளர் பட்டியல் தயாரிக்கும் அதிகாரிகள் வருகிற ஜனவரி மாதம் 1-ந் தேதி முதல் வீடு வீடாக வந்து வாக்காளர்கள் பெயர்களைப் பதிவு செய்வார்கள்.

தினமும் காலையிலும், மாலையிலும் மற்றும் விடுமுறை நாட்களிலும் அதிகாரிகள் வருவார்கள். 21 நாட்களுக்கு அதிகாரிகள் ஒவ்வொரு பகுதியாக வந்து பட்டியல் தயார்ப்பார்கள்.

ஒரு வீட்டில் உள்ளவர்களில் ஓட்டு போட தகுதியான வர்களின் பெயர்களை பதிவு செய்த பிறகு அதில் அந்த வீட்டின் தலைவர் கையெழுத்துப் போட வேண்டும்.

வாக்காளர் பட்டியல் தயாரிக்கும் அதிகாரி, அங்கேயே இதில் ஒரு பிரதி எடுத்து வீட்டில் உள்ளவர்களிடம் கொடுத்துவிடுவார். இதை ஒரு அட்டையில் ஒட்டி பத்திரமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்த வாக்காளர் பட்டியலில் பெயரை பதிவு செய்து கொள்ளத் தவறியவர்கள் ஜனவரி 21-ந் தேதிக்குள் தாசில்தார் அல்லது நகரசபை கமிஷனரிடம் கூறி பதிவுசெய்து கொள்ள வேண்டும்.

மாவட்டக் கலெக்டர்களும் சென்னை மாநகராட்சி கமிஷனரும் அரசியல் கட்சி தலைவர்களுடன் தொடர்பு கொண்டு வாக்காளர் பட்டியலில் சேர்க்கவேண்டிய அல்லது தவிர்க்கவேண்டிய பகுதிகள் பற்றி முடிவுசெய்வார்கள். எனவே வாக்காளர் பட்டியல் தயாரிப்பதற்கு எல்லோரும் ஒத்துழைப்பு கொடுக்கவேண்டும் என்று தமிழக அரசு வெளியிட்டுள்ள செய்திகுறிப்பில் கூறப்பட்டுள்ளது.

# உலக வங்கிக்கு ரூ. 562 கோடி கடன்: அரபு நாடு கொடுத்திருக்கிறது

ஜெட்டா, டிச. 18—உலக வங்கிக்கு 75 கோடி டாலரை (சுமார் 562 கோடி ரூபாய்) கடனக சவூதி அரேபியா நாடு கொடுத்திருக்கிறது.

அந்த தேசத்தின் நிதி இலாகா மந்திரி முகமது சுபா அல்லில் இந்த தகவலை நேற்று வெளியிட்டார்.

உலக வங்கிக்கு இதுவரை எந்த தேசமும இவ்வளவு பெரிய தொகையை கடனக அளித்ததில்லை உலகத்தில் அபிவிருத்தி அடைந்துவரும நாடுகளுக்கு கடன் வசதி வழங்குவதில் இந்த பணம் பயன்படுத்தப்படும.




Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P.P.S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Chief Editor: S.V.G. Sowrirajulu
Honorary Editor: N. Muthu kumarasami